# தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை

தன்னை நம்பிக்
கரம் பிடித்த மனைவியை,
போகப் பொருளாகப் பயன்படுத்தாமல்,
உணர்வுகளும், உணர்ச்சிகளும் கொண்ட
உயிரினமாக மதித்து நடத்தி,
தாம்பத்ய இன்பங்கள் அனைத்தையும்
தவறாமல் வழங்கி,
மனைவியின் மனநலம் காத்து,
இல்லற வாழ்வை இன்புற வாழ்ந்திட
விரும்பும்,

## ஆண்களுக்கான ஓர் அற்புதப் புதையல்

## போதி பிரவேஷ்

தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை போதி பிரவேஷ்

**ஒரு தீபம்**

**வேறொரு தீபத்தை**

**இங்கே ஒளிர வைக்கிறது.**

**அந்த வேறொரு தீபம்**

**இனியொரு தீபத்தை ஒளிர வைக்கும்**

**என்கிற உறுதியான நம்பிக்கையோடு,**



## சமர்ப்பணம்

தங்கள் வாழ்வில்,
ஒரே ஒரு முறை கூட,
உச்ச கட்ட இன்பத்தை,
அனுபவித்திராத ஒவ்வொரு இல்லத்தரசிக்கும்

# நன்றியறிவிப்பு.

நான் பிறக்கும் போது, என்னுடைய அறிவு சார் சொத்து என் ஆழ் மனம் மட்டுமே. உலக அறிவைப் பொறுத்த வரை, நான் ஒரு வெள்ளைக் காகிதமாகவே பிறந்தேன். அதே போல, நிம்மதியான குடும்ப வாழ்க்கைக்குரிய மிகச் சரியான பாதையைத் தேடத் துவங்கிய போதும், ஒரு வெள்ளைக் காகிதமாகவே பயணத்தைத் துவக்கினேன். ஏறக்குறைய பதினெட்டு ஆண்டு காலத் தேடலின் விளைவாக, நான் பெற்றிருக்கின்ற அறிவின் ஒரு பகுதியையே இந்த நூல் வாயிலாகப் பகிர்ந்து கொண்டிருக்கிறேன்.

பதினெட்டு ஆண்டுகளில் ஏறக்குறைய ஐந்தாண்டுகள் புற உலகோடு எனக்கிருந்த அனைத்து தொடர்புகளையும் துண்டித்துக் கொண்டு, புத்தகப் புழுவாகவே நான் வாழ்ந்திருக்கிறேன். அப்போது ஏராளமான நூல்களை வாசித்திருக்கிறேன். ஒவ்வொரு நூலின் கருத்தையும் உள்வாங்கி, அலசி ஆராய்வதற்குரிய விதிகளின் படி வாசித்திருக்கிறேன். அதனால் ஏராளமான தகவல்கள் என் ஆழ்மனதில் பதிவாகியுள்ளன.

ஆனால், எந்த நூலின் வாயிலாக எந்த அறிவைக் கற்றுக் கொண்டேன், எந்தத் தாக்கத்தைப் பெற்றேன் என்பதை மட்டும் என்னால் நினைவு கூற முடிவதில்லை. ஆகவே உலகில் இதுவரை தோன்றி மறைந்துள்ள, என் சம காலத்திலும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற அனைத்து நூலாசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு நூலைத் துவக்குகிறேன்.

## சட்டபூர்வ எச்சரிக்கை.

இல்லற வாழ்வைக் குடும்ப விவகாரச் சண்டைகளற்ற பூஞ்சோலையாக்கி, ஆழ்மன நிம்மதியோடு, தம்பதியர் வாழ்வதற்கான பல ஆலோசனைகளையும், ஒரு தார வாழ்வில் கடைப் பிடிக்க வேண்டிய தாம்பத்ய அணுகு முறைகளையும், இந்தியாவின் பண்டைய ஞானமான தந்த்ரா வழிமுறைகளையும், இந்நூல் பரிந்துரை செய்கிறதே தவிர, மருத்துவர்கள் தொழில் ரீதியாகச் செய்யக் கூடிய மருத்துவ சிகிட்சையையோ, மனநல ஆலோசனையையோ வழங்கவில்லை.

நூலில் சொல்லப் பட்டுள்ள தகவல்கள் எதுவும் உத்தரவாதம் கொண்டதல்ல. சொல்லப் பட்டிருப்பவை போல் நிகழலாம். நிகழாமலும் போகலாம். அது அவரவருடைய அந்தந்த நேரத்து மன நிலையைப் பொறுத்தது. உடல் நிலையைப் பொறுத்தது. ஆகவே, இதை ஒரு கல்வியாகவேகருத வேண்டும்.

ஆகவே, நூலில் சொல்லப்பட்டுள்ள வழிமுறைகளைப் பின் பற்றும் போது, உங்கள் உடலிலோ, அல்லது மனதிலோ ஏதேனும் விரும்பத் தகாத மாற்றங்கள் ஏற்பட்டால், உரிய பாலியல் மருத்துவரையோ, உளவியல் அறிஞரையோ உடனடியாக அணுகி ஆலோசனை பெறத் தயங்க வேண்டாம் எனக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

மேலும், இந்நூலில் பரிந்துரைக்கப் பட்டுள்ள அறிவுரைகளைப் பின்பற்றியதால் ஏற்பட்டு விட்டதாகச் சொல்லப்படும் எந்தப் பிரச்சினைக்கும், பொருள் இழப்புகளுக்கும், உடல்நல பாதிப்புகளுக்கும், உறவு முறைச் சேதங்களுக்கும், இன்ன பிற அபாயங்களுக்கும், மன உளைச்சல்களுக்கும், நூலின் ஆசிரியரோ, பதிப்பாளரோ, வெளியீட்டாளரோ அல்லது விற்பனையாளரோ எவ்விதப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்கிற தகவல் சட்ட பூர்வமாக இங்கே வலியுறுத்தித் தெரிவிக்கப் படுகிறது.

# தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை.

*இல்லற வாழ்வை*
*இன்புற வாழ்ந்திட*
*ஆண்களுக்கான*
*ஓர் அற்புதப் புதையல்.*

**போதி பிரவேஷ்.**

# பொருளடக்கம்

## பாகம்- 4

### தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை



## பாகம்- 5

### தந்த்ரா வழங்கும் பேரின்பங்கள்

# முன்னுரை

இந்தியா என்கிற புனித பூமியின் பெருமைகளில் சிலவற்றைப் பற்றிய சிறிய அறிமுகத்தோடு, தன்னுடைய பயணத்தை நூல் துவக்குகிறது.

இவ்வாறு துவக்க வேண்டியது இந்த நூலின் கடமை.

ஏனெனில், பண்டைய இந்தியப் பெருமைகளில் முதன்மையாகத் திகழும் ஒரு ஞானத்தைத் தழுவியே இந்நூல் எழுதப் பட்டுள்ளது.

அதற்கான நன்றியறிவிப்பே இந்த முன்னுரை.

பிரபஞ்சத்தைப் பற்றியோ, இயற்கையைப் பற்றியோ அல்லது மனித உடலைப் பற்றியோ படிக்க வாய்ப்புக் கிடைக்கும் போது, படைப்பின் மகிமையைக் கண்டு ஏற்படக் கூடிய மலைப்பும், வியப்பும் அளவிட முடியாதவை.

அதே போலத் தான் இந்திய மண்ணின் பெருமைகளை அறிய நேரும் போதும் வியப்பும், மலைப்பும் ஏற்படுகின்றன.

இதோ நீங்களே கூட அந்தப் பட்டியலின் பகுதியொன்றைப் பாருங்கள்.

சூரிய மண்டலம் நவ கிரகங்களைக் கொண்டது. கோள வடிவான கிரகங்கள் அனைத்தும் தன்னைத் தானே சுற்றிய படி சூரியனையும் சுற்றி வருகின்றன என்கிற உண்மையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கண்டு பிடித்த நாடு இந்தியா.

பூகோளம் என்கிற வார்த்தையே சாட்சி.

மேற்கண்ட உண்மையைக் கூறியவர் ஆர்ய பட்டர்.

அவர் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தவர்.

ஐயமிருப்பின் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னால் கட்டப் பட்ட எந்தவொரு இந்துக் கோவிலிலும் அமைக்கப்பட்டுள்ள நவகிரக சிலைகளை எண்ணிப் பாருங்கள்.

கி. பி. அறுநூறுகளில் தோன்றிய வராகமிஹ்ரா என்கிற முனிவரால், "பஞ்ச சித்தாந்திகா" என்கிற நூலிலும் மேற்கண்ட சூரிய மண்டல உண்மைகள் தெளிவாக விளக்கப் பட்டுள்ளன.

அதன் அடிப்படையில் தான் பஞ்சாங்கம் கணிக்கப் படுகிறது.

அடுத்து பதினோறாம் நூற்றாண்டில், தோன்றிய பாஸ்கராச்சார்யா என்கிற கணித மேதையால் லீலாவதி என்கிற நூலிலும், மேற்கண்ட தகவல்கள் சொல்லப் பட்டிருக்கின்றன.

சூரிய மண்டலம் நவ கோள்களைக் கொண்டது. இதில் சூரியனே மையம். மற்ற கோள்களனைத்தும் சூரியனைச் சுற்றி வருகின்றன. இதில் சந்திரன் பூமியையும் சேர்த்து சுற்றிக் கொண்டிருக்கிறது.

அவ்வாறு சுற்றிக் கொண்டிருப்பதால், பூமிக்கும் சூரியனுக்கும் இடையே சந்திரன் வரும் போது சூரிய கிரகணமும், சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையே பூமி வரும் போது சந்திர கிரகணமும் ஏற்படுகிறது. கிரகங்கள் தட்டையாக இருக்குமானால், இது போல் ஒன்றையொன்று மறைக்க முடியாது என்று ரிக் வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது.

பூமிக்கும் சந்திரனுக்கும் இடையே உள்ள தூரத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமா? சந்திரனின் விட்டத்தை நூற்றியெட்டால் பெருக்குங்கள். துல்லியமான தூரத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

அதே போல, பூமிக்கும் சூரியனுக்கும் இடையே உள்ள தூரத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமா? சூரியனின் விட்டத்தை நூற்றியெட்டால் பெருக்குங்கள். துல்லியமான தூரத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

சூரியனின் விட்டம் எவ்வளவென்று தெரிந்து கொள்ள வேண்டுமா? பூமியின் விட்டத்தை நூற்றியெட்டால் பெருக்குங்கள். துல்லியமான விடை கிடைத்து விடும்.

இவையெல்லாம் வேதங்களில் சொல்லப் பட்டுள்ள வான சாஸ்திர உண்மைகள்.

ஆனால் பூமி கோள வடிவானது என்கிற உண்மையைக் கண்டு பிடித்தவர் கலீலியோ என்று உலகம் முழுவதும் கற்பிக்கப் படுகிறது. இந்தியர்களான நாம் அது தான் உண்மையான தகவலெனப் படித்துக் கொண்டிருக்கிறோம்.

சூரியன் ஒரு முழு நட்சத்திரம் அல்ல. குறை பிரசவத்தில் பிறந்த ஒரு சவலைப் பிள்ளை என ரிக் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள தகவலை இன்றைய வான சாஸ்திரிகள் கண்டு பிடித்துக் கூறுகிறார்கள்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, புவியீர்ப்பு விசையைக் கண்டு பிடித்த பூமி இந்திய பூமி.

அதே போல, கோள்களும், நட்சத்திரங்களும் ஒன்றையொன்று காந்த சக்தி மூலம் ஈர்த்துப் பிடித்துக் கொண்டிருப்பதையும் கூறி, அந்த காந்த சக்தியால் தான் பிரபஞ்சத்தின் அந்தரத்தில் விழுந்து நொறுங்கி விடாமலும், இடம் பெயர்ந்து விடாமலும் குறிப்பிட்ட நியமப் படி கிரகங்கள் அனைத்தும் சுற்றிக் கொண்டிருக்கின்றன என விளக்கமளித்து நிரூபித்து வைத்த ஞானிகள் இந்திய ஞானிகள்.

கடல் அலைகளின் வேகம் பௌர்ணமி இரவில் அதிகரித்திட சந்திரனின் ஈர்ப்பு விசையே காரணம் எனக் கண்டறிந்தவை பண்டைய வேதங்கள்.

ஸ்ரீ ஆதி சங்கரர் ப்ரசான உபனிடதத்திற்கு எழுதிய உரையிலே இதைக் குறிப்பிட்டிருக்கிறார்.

இவர்களோடு ஒப்பிடும் போது நியூட்டன் என்பவர் நேற்றுப் பிறந்த குழந்தை.

ஆனால், மரத்திலிருந்து கீழே விழுந்த பழத்தைப் பார்த்து, சர். ஐசக் நியூட்டன் புவியீர்ப்பு விசையைக் கண்டு பிடித்தார் என்று நாம் படித்துக் கொண்டிருக்கிறோம்.

கணிதம் தான் அனைத்து துறைகளுக்கும் ஆதி மூலம்.

அந்த கணிதத் திற்கே மூலம் எண்கள்.

சூன்யம் முதல் நவ வரை எண்களைக் கண்டு பிடித்தவர்கள் இந்திய ஞானிகள். பத்தின் நூற்றி நாற்பதாவது மடங்கை மகாவீரரே பயன் படுத்தியிருக்கிறார். (டென் டு தி பவர் ஆஃப் ஒன் ஃபோர்ட்டி.)

மகாவீரர் இரண்டாயிரத்து அறுநூறு வருடங்களுக்கு முன் பிறந்தவர்.

மேற்கண்ட இந்திய ஞானியரோடு ஒப்பிடும் போது கோபர்னிகசும், கலீலியோவும், நியூட்டனும் நேற்றுப் பிறந்த குழந்தைகள்.

ஆனால், அவர்களைத் தான் கண்டு பிடிப்பாளர்கள் என்று உலகம் கூறி வருகிறது.

இந்திய ஞானிகளின் நூல்களனைத்தும் பதினாறாம் நூற்றாண்டில் மேக்ஸ் முல்லராலும், ரிச்சர்டு பர்டனாலும் (ஹாலிவுட் நடிகர் அல்ல) ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்ட பிறகு தான், மேற்குலகில் கண்டு பிடிப்பாளர்களே உருவானார்கள் என்கிற தகவல் திட்டமிட்டு மறைக்கப் படுகிறது.

அணு குண்டை முதன் முதலில் பயன்படுத்திய நாடு இந்தியா.

பதினெட்டு நாட்கள் மட்டுமே நடந்த பாரதப் போரின் போது கிளம்பிய புழுதி அடங்கி, குருஷேத்திர மண்ணின் மீது சூரியக் கதிர்கள் பட்டிட, முப்பத்தாறு ஆண்டுகள் ஆயிற்று என்பதே அங்கே அணு குண்டு பயன் படுத்தப் பட்டதற்கான சாட்சி.

ஹரப்பா, மொகஞ்சதாரோவிலிருந்து எடுக்கப்பட்ட எலும்புக் கூடுகளில், நாகஷாகி, ஹிரோஸிமா நகரங்களிலிருந்து எடுக்கப்பட்ட எலும்புக் கூடுகளில் இருந்த அணுக் கதிர் வீச்சு இருந்திருக்கிறது.

ஏவுகணைகளை முதன் முதலில் பயன்படுத்திய நாடு இந்தியா. பதினெட்டு நாட்கள் மட்டுமே நடந்த பாரதப் போரே அதற்கும் சாட்சி.

கர்ணனால் அக்னி அம்பு ஏவப்பட்டது. வில்லிலிருந்து ஒரு அம்பு தான் கிளம்பியது. ஆனால், வானில் செல்லும் போது ஓராயிரம் அம்புகளாக உருமாறி, அது பெருகிப் போயிற்று.

அவற்றை எதிர் கொண்டு தாக்கி அழிக்க, அர்ச்சுனன் தண்ணீர் அம்பு ஒன்றை செலுத்தினான். ஒரே ஒரு அம்பாகத்தான் அர்ச்சுனனின் அம்பும் கிளம்பியது. அவ்வாறு கிளம்பிய அந்த நீரம்பும் வானில் செல்லும் போது ஓராயிரம் அம்புகளாக உருமாறி, அத்தனை அக்னி அம்புகளையும் ஆகாயத்திலேயே எதிர் கொண்டு அணைத்து அழித்தது.

ஸ்கட், பேட்ரியாட் போன்ற ஏவுகணைகள் கர்ணனும், அர்ச்சுனனும் ஏவிய ஏவுகணைகளின் பிரதிகள்.

அணுகுண்டின் அன்றைய பெயர் பிரம்மாஸ்திரம்.

நியூட்டன் பிறப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சூரிய ஒளிக்கதிர்கள் ஏழு வண்ணங்களைக் கொண்டவை என அதர்வண வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது.

ஒளியின் வேகம் விநாடிக்கு 1,88,064 மைல்கள் என ரிக் வேதத்தில் கணக்கிட்டுள்ள முறையை விளக்க பல பக்கங்கள் எழுத வேண்டியிருக்கும்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பிரபஞ்சத்தைப் பற்றியும், உயிரினங்களின் தோற்றம் பற்றியும் ஆய்வு செய்து அந்தக் கணக்கை இந்திய ஞானிகள் எழுதி வைத்திருக்கிறார்கள்.

மேற்குலகமே வியந்து நோக்கும் கணக்கு இவ்வாறு தொடங்குகிறது.

இப்போது நடந்து கொண்டிருப்பது கலியுகம். இதன் காலம் 4,32,000 ஆண்டுகள். இதற்கு முன் நடந்த துவாபர யுகம் 8,64,000 ஆண்டுகளையும், அதற்கு முந்தைய திரேத யுகம் 12,96,000 ஆண்டுகளையும், அதற்கு முந்தைய சதுர் யுகம் 17,28,000 ஆண்டுகளையும் கொண்டது. இது ஒரு மகா யுகம்.

ஒரு மகா யுகம் என்பது 43,20,000 ஆண்டுகள். இது போல எழுபத்திரண்டு மகா யுகங்களைக் கொண்டது ஒரு மன்வந்தரம்.

பிரம்மனின் ஒரு பகற் பொழுது பதிநான்கு மன்வந்திர காலம்.

இந்தக் கணக்கின் படி, பிரம்மனின் ஒரு நாள் முடிய எண்ணூற்று அறுபத்து நான்கு கோடி ஆண்டுகள் ஆகிறது.

பிரம்மனின் ஆயுளோ நூறாண்டுகள்.

அதாவது முப்பத்து ஆறாயிரத்து ஐநூறு நாட்களைக் கொண்டது பிரம்மனின் ஆயுள்.

அப்படியெனில், பிரம்மனின் ஆயுட்காலம் எத்தனை கோடி கோடி ஆண்டுகள் என்று கணக்குப் போட்டு தெரிந்து கொள்ளுங்கள்.

ஏனெனில், அது தான் விஸ்ணுவின் ஒரு பகற்பொழுது.

விஸ்ணுவின் ஆயுளோ ஆயிரம் ஆண்டுகள்.

அப்படியெனில் பூமியின் ஆயுள் எவ்வளவு என்பதைக் கணக்கிட்டுப் பார்க்க இன்றைய மனிதனுக்கு கணிணி தேவைப்படும்.

மேற்கண்ட கணக்கை இந்திய ஞானிகள் கணக்கிட்டுக் கொண்டிருந்த காலத்தில் கிரேக்கர்கள் பத்தாயிரம் வரையும், ரோமானியர்கள் வெறும் ஆயிரம் வரையும் எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

அதற்கு மேல் அங்கே எண்களே கண்டு பிடிக்கப் படவில்லை.

முப்பது இலட்சம் வகையான கடல் வாழ் உயிரினங்கள், இருபது இலட்சம் வகையான தாவரங்கள், பத்து இலட்சம் வகையான பறவைகள், ஒன்பது இலட்சம் வகையான விலங்குகள், ஒன்பது இலட்சம் வகையான ஊறும் ஜந்துக்கள், நான்கு இலட்சம் வகையான குரங்கினங்கள், இரண்டு இலட்சம் வகையான மனிதர்கள் என மொத்தம் எண்பத்து நான்கு இலட்சம் வகையான உயிரினங்கள் பூமியில் வசிப்பதாக விஸ்ணு புராணம் என்கிற பழங்கால நூலில் சொல்லப்பட்டுள்ளது.

வானொலி, தொலைக்காட்சி, செயற்கைக்கோள் தொடர்புகள் போன்ற வற்றைப் பற்றிய தொழில் நுட்பத்தை முதலில் பயன்படுத்திய மனிதர் சஞ்சயன். நிகழ்வு மகாபாரதம். அந்த நுட்பங்களை விஞ்ஞான பூர்வமாக விளக்கி நிரூபித்தவர் ஜெகதீஷ் சந்த்ர போஸ்.

பல பிரசங்கங்கள் வாயிலாக, அவர் இதை நிரூபித்திருக்கிறார். ஆனால் தன் கண்டுபிடிப்பைக் காப்புரிமை செய்ய அவர் மறுத்து விட்டதால், போசின் பிரசங்கங்களுக்கு ஒரு மாணவராக வந்து கலந்து கொண்ட மார்கோனி அதைக் கண்டு பிடித்ததாய்க் கூறி பெயரைத் தட்டிச் சென்று விட்டார்.

2000 ஆண்டுகளுக்கு முன், சிமெண்ட், சுண்ணாம்பு போன்ற இணைப்புப் பசை எதுவுமே இல்லாமல், கரிகாற் சோழனால் கட்டப் பட்ட கல்லணை தான் உலகில் மனிதனால் உருவாக்கப் பட்ட செயற்கையான முதல் நீர்த்தேக்கம்.

இன்னும் அது பழுதடையவில்லை என்பது அதன் தனிச் சிறப்பு.

விமானத்தை முதன் முதலில் பயன்படுத்திய நாடு இந்தியா.

சீதையை இராவணன் சிறையெடுத்துச் செல்லப் பயன் படுத்தப் பட்ட வாகனம் புஸ்பக விமானம்.

அது குபேரனின் பிரத்யேக வாகனம்.

பரத்வாஜ முனிவர் தான் விமான சாஸ்திரத்தைக் கண்டிபிடித்தவர்.

பரத் வாஜ முனிவர் எழுதியுள்ள யந்த்ர சாஸ்த்ரா என்கிற நூலில் முன்னூறு வகையான தரைவழிப் போக்குவரத்து வாகனங்களையும், எழுநூற்றி எண்பது வகையான நீர்வழிப் போக்குவரத்து வாகனங்களையும், நூறு வகையான வான ஊர்திகளையும் பற்றி விலாவாரியாகப் பேசப் பட்டிருக்கிறது.

ஆனால், பெயர் ரைட் சகோதரர்களைச் சென்றடைந்துள்ளது.

மாட்டு வண்டி முதல் பந்தயக் கார் ஈராக, நீராவியால் இயங்கியவை, சூரிய ஒளியால் இயங்கியவை, காந்த சக்தியைக் கொண்டு இயங்கியவை, என வகை வாரியாக, ரிக் வேதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

தன்னுடைய ஆறாவது வயதிலேயே ஒரு நூலை எழுதிய பெருமை ஜகத்குரு ஆதி சங்கரருக்கு உண்டு.

இரண்டாயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பே அனைத்தும் சக்தி மயம் என்கிற உண்மையை "அத்வைதா" என்கிற ஒற்றை வார்த்தையில் நிரூபித்து வைத்த, மகாஞானி அவர்.

அந்த ஞானியின் கூற்றை இப்போது தான் நவீன விஞ்ஞானம் கண்டு பிடித்திருக்கிறது.

ஒரு மொழியின் முதல் எழுத்தில் துவங்கி கடைசி எழுத்தில் முடிக்கப் பட்ட ஒரே நூல் திருக்குறள்.

அது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப் பட்டது.

தமிழின் வயது நாற்பதாயிரம் ஆண்டுகள்.

குளோனிங் முறையில் மனிதக் குழந்தையை உருவாக்குவது பற்றி 1980 களில் தான் மேற்குலகுக்குத் தெரிய வந்தது.

ஆனால், அகத்திய முனிவரும், துரோணாச்சாரியாரும் குளோனிங் முறையில் உருவான குழந்தைகள்.

அவர்களைத் தவிர, கௌரவர்கள் நூறு பேரும், அவர்களுடைய ஒரே சகோதரியும் கூட குளோனிங் குழந்தைகளே.

இவ்வாறு பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவில் குளோனிங் முறையில் மனிதர்கள் உருவாக்கப் பட்டிருக்கிறார்கள்.

மனமே நோய்களின் மூலம் என்கிற உண்மையை இப்போது தான் அலோபதி ஏற்கிறது. ஆனால், இந்த மகா உண்மையை ஆயுர்வேத மருத்து வத்தில், தன்வந்தரி பரம்பரா என்கிற தத்துவத்தில் பிரம்மன் முதலில் பிரஜாபதியிடம் சொல்லி, அதன் பின் இந்திரன், பரத்வாஜ முனி வாயிலாக ஏராளமானவர் களாலும், அகத்திய முனிவரால், சித்த மருத்துவம் வாயிலாகவும் சொல்லப் பட்டிருக்கிறது.

அனஸ்தீஷியா கொடுத்து அறுவை சிகிட்சையைச் செய்தது நாம்.

முதல் அறுவை சிகிட்சை நோயாளி போஜ மன்னர்.

அவருடைய மூளையிலிருந்த கட்டி அகற்றப் பட்டது.

அதன் பின் புத்தரால் உலகெங்கும் இந்த விஞ்ஞானம் கொண்டு செல்ல பட்டது.

அதே போல, பருத்தி இழையைக் கொண்டு காகிதத்தைக் கண்டு பிடித்தது இந்தியா. அந்தத் தொழில் நுட்பத்தை இங்கிருந்து சீனாவுக்குக் கொண்டு சென்றவர்கள் புத்த பிக்குகள். அதனால், காகிதத்தைக் கண்டு பிடித்த பெருமை சீனாவைச் சென்றடைந்து விட்டது.

கடற்பகுதியை ஆள முடிந்தவரே நிலப் பகுதியை ஆளும் வல்லமையோடு வாழ முடியும் என்பதை உணர்ந்து, கடற்படையை முதன் முதலில் உருவாக்கிய நாடு இந்தியா. துவாரகை தான் உலகின் முதல் துறைமுகம்.

அது குஜராத்திற்கு அருகில் அரபிக் கடலுக்குள் சிதிலமடைந்த நிலையில் இப்போதும் இருக்கிறது. சிந்து சம வெளி மக்கள் தான் அதற்கடுத்த துறைமுகத்தை உருவாக்கியவர்கள்.

தென்னகத்திலுள்ள பூம்புகார், கொற்கை போன்றவை மற்றவை.

போஜ ராஜன் எழுதிய "யுதகல்பதரு" என்கிற நூல் தான் கப்பல் கட்டுமானப் பொறியியல் பற்றி எழுதப் பட்ட முதல் நூல்.

அதன் அடிப்படையில், முதன் முதலாகக் கப்பலைக் கட்டி, உலகெங்கும் பயணம் செய்தவர்கள் இந்தியர்கள்.

அமெரிக்காவின் நாசா விஞ்ஞானிகளில் நாற்பது சதவீதம், மருத்துவர்களில் நாற்பது சதவீதம், கணிணி நிபுணர்களில் நாற்பது சதவீதம் பேர் இந்தியர்கள்.

அமெரிக்காவின் மகா கோடீஸ்வரர்களில் பதினைந்து சதவீதம், உயர் தொழில் நுட்ப நிறுவனங்களின் தலைவர்களில் பத்து சதவீதம், சிலிக்கான் பள்ளத் தாக்கில் உள்ள பொறியாளர்களில் முப்பத்து ஐந்து சதவீதம் பேர் இந்தியர்கள்.

இந்தியாவின் மூளையெல்லாம் இப்போது தான் இவ்வாறு அமெரிக்கா விற்கு ஏற்றுமதியாகிறது என எண்ண வேண்டாம்.

இருபதாயிரம் ஆண்டு களுக்கு முன்பே முதன் முதலாக அமெரிக்காவில் குடியேறிய மக்கள் இந்தியா வின் மயன்கள்.

ஆகவே, அமெரிக்கா நம்முடைய பூர்வீகச் சொத்து.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, கிரேக்கம், ரோமப் பேரரசு, எகிப்து, போர்ச்சுகல், பிரான்சு, இங்கிலாந்து, ஜப்பான், இந்தோனேசியா, ஜாவா எனத் திரை கடல் ஓடித் திரவியம் தேடியவர்கள் இந்தியர்கள்.

இவர்களோடு ஒப்பிடும் போது, கொலம்பசும், வாஸ்கோடகாமாவும், மேக்மில்லனும் மிகச் சமீபத்தில் உருவான மாலுமிகள். சோழப் பேரரசின் வரைபடமே சான்று.

பீகாரில் உள்ள புத்தரின் வெண்கல சிலை நிறுவப்பட்டு இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகள் ஆகிறது. இன்றளவிலும் எவ்வித அழுக்குமின்றி பளபளப் பாகவே இருக்கிறது. ஆனால், வீட்டுப் பரணில் வெய்யிலும், மழையும் படாமல் அடுக்கி வைத்திருந்தும், வெண்கலப் பாத்திரங்களில் பாசம் பிடித்து விடுகிறது.

அதே போல, குதுப்மினார் இரும்புத் தூணின் வயது ஆயிரத்து ஐநூறு ஆண்டுகள். இன்னும் அது துருப்பிடிக்கவில்லை. ஆனால், நம்முடைய வீட்டின் முகப்புக் கதவு மட்டும், தொடர்ந்து வர்ணமடித்துப் பாராமரித்தும் கூட, பத்தே வருடங்களில், துருவேறி, சிதிலமடைந்து போகிறது.

குதுப்மினார் தூணும், புத்தருடைய சிலையும் உருவாக்கப் பட்ட விதமும் அவற்றின் மீது கொடுக்கப் பட்டுள்ள இரசாயனப் பூச்சும் தான் அவற்றை ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றன என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

அந்த அளவிற்கு உலோகத் துறையில் மகா அறிவுடன் திகழ்ந்த நாடு இந்தியா.

கோமயத்தை புற்று நோய்க்கும், எலும்புறுக்கி நோய்க்கும் மருந்தாகப் பயன் படுத்தலாம். பசுவின் சாணத்தால் ஆன வறட்டிகளில் இருந்து வருகின்ற புகை, வளி மண்டலத்தில் உள்ள கரிய மிள வாயு மாசை நீக்குவதோடு, ஓசோன் ஓட்டையைக் கூட அடைக்க வல்லது என என்று இன்றைய அறிவியல் கண்டு பிடித்திருக்கிறது.

ஆனால், பல்லாயிரம் ஆண்டுகளாகப் பசுவை வணங்கி, கோமயத்தைக் கிருமி நாசினியாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் பூமி இந்திய பூமி.

இவை மட்டுமல்ல, நாழிகை, நாட்கள், வாரங்கள், மாதங்கள், வருடங்கள் என கால அட்டவணையை உருவாக்கியது, விவசாயத்தை முறையாய்ச் செய்யக் கற்றுக் கொடுத்தது, திருமணம் மூலம் சமூக ஒழுங்குக்கு வித்திட்டது, குடும்ப அமைப்பு முறை, தனிச் சொத்துக்களை உருவாக்கிக் கொள்ளும் முறை, வாரிசுரிமை என இன்றைய சமூகக் கட்டமைப்பை உலகிற்கு உருவாக்கிக் கொடுத்தது இந்திய பூமி.

திட்டமிட்டு உருவாக்கப் பட்ட நகரங்கள் , சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட வீடுகள், அகன்ற தெருக்கள், தெருக்களின் நடுவிலே பாதாள சாக்கடை, பொதுக் கழிவறை, சட்டம், நீதிமன்றம், குடவோலை முறையில் தேர்தல், அர்த்த சாஸ்திரத்தின் அடிப்படையில் ஆட்சி நிர்வாகம், ஆயுர்வேத சித்த மருத்துவங்கள், யோக கலைகள், தியானம், பல்கலைக் கழகங்கள், ஆடல், பாடல், இசை, என எத்தனையோ கலைகளை, முதன் முதலாகக் கண்டு பிடித்தது இந்திய பூமி.

கணித மேதை பிதாகரஸ் தட்சசீலப் பல்கலைக் கழகத்தின் மாணவர். பிதாகரஸ் தேற்றம் அவரால் கண்டு பிடிக்கப் பட்டது அல்ல. இந்தியாவில் பயின்ற போது அவரால் கற்றுக் கொள்ளப் பட்டது.

ஏனெனில், பிதாகரஸ் பிறப்பதற்கு அறுநூறு வருடங்களுக்கு முன்பிருந்தே அந்தத் தேற்றம் தொடர்ச்சியாகப் போதிக்கப் பட்டிருக்கிறது. ஆகவே, பிதாகரஸ் தேற்றத்தைப் பிரபலப் படுத்தியது மட்டுமே பிதாகரஸ் செய்த வேலை.

அதே போல, இயற் கணிதத்தை,(அல்ஜீப்ரா) வடிவியல் கணிதத்தை, (ஜியாமெட்ரி) முக்கோணக் கணிதத்தை (ட்ரிகோணமெட்ரி) கண்டு பிடித்தது இந்தியா. இந்திய தேசம் எந்த வித காப்புரிமையும் (பேடண்ட் ரைட்) பெற்றுக் கொள்ளாமல், உலகிற்கு மேற்கண்டவற்றைக் கற்றுக் கொடுத்துக் கொண்டி ருந்த போது, பிற பகுதி மக்கள் நாடோடிகளாக வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

வைரக் கற்கள் பதிக்கப் பட்ட தங்கத்தாலான கிரீடங்களை அணிந்தபடி, இந்திய அரசர்கள் அரண்மனைகளில் வாழ்ந்து கொண்டிருந்த போது, இந்திய மக்களெல்லாம் பட்டாடை உடுத்தி, விழாக்களைக் கொண்டாடிக் கொண்டிருந்த போது, ஐரோப்பியர்கள் உட்பட உலகின் பிற பகுதிகளில் வாழ்ந்தவர்கள் இலை தழைகளைக் கொண்ட ஆடைகளை அணிந்து திரியும் காட்டு மிராண்டிகளாக வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

இவையெல்லாம் இந்திய தேசத்தின் பெருமைகள் பற்றிய கொசுறுத் தகவல்கள் மட்டுமே.

முழுப் பெருமையையும் வெளிப்படுத்த, ஆயிரம் பக்கங்கள் அல்ல, ஆயிரம் நூல்களையே எழுத வேண்டியிருக்கும்.

அத்துணை பெருமைகளைக் கொண்டது நம் பாரத தேசம்.

இந்திய ஞானிகளால் உச்சரிக்கப்படாத ஒரு வார்த்தையோ, சிந்திக்கப் படாத ஒரு எண்ணமோ, கண்டு பிடிக்கப்படாத ஒரு விஞ்ஞான உண்மையோ உலகில் எதுவுமே இல்லை.

அந்த அளவிற்கு இந்திய ஞானிகளின் அறிவு ஒவ்வொரு துறையிலும் பிரமிக்கத்தக்க வகையில் இருந்திருக்கிறது என்கிற கருத்தைப் பகிர்ந்து கொள்ளவே பழம்பெருமையின் சில கொசுறுத் தகவல்கள் இங்கே குறிப்பிடப் பட்டுள்ளன.

உலகின் தலைநகராக, சொர்க்க புரியாக, செல்வக் களஞ்சியமாக இருந்த இந்தியா தான், உலகிலேயே மிக அதிகமாகக் கொள்ளையடிக்கப் பட்ட பூமி.

கடந்த ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளில் அன்னியர்களால் கொள்ளய டித்துக் கொண்டு செல்லப்பட்ட இந்திய பூமியின் செல்வங்களும்,அறிவுத் தகவல்களும் அளவிட முடியாதவை.

**இந்திய மண்ணிலிருந்து கொள்ளையடித்துச் செல்லப்பட்ட அறிவோடு ஒப்பிட்டால், கோகினூர் வைரம் ஒரு குப்பைக்குச் சமம்.**

பண்டைய இந்தியாவின் பங்களிப்புகளில் கொள்ளையிட முடிந்தவை கொள்ளையடிக்கப் பட்டன. கொள்ளையடிக்க முடியாதவை அழிக்கப் பட்டன. அவ்வாறு அழிக்கப்பட்ட இந்தியப் பல்கலைக் கழகங்களின் மதிப்பு,

நூலகங்களின் மதிப்பு, இந்துக் கோவில்களின் மதிப்பு, அங்கே சேமித்து வைத்திருந்த அறிவுத் தகவல்களின் மதிப்பு, பொக்கிசங்களின் மதிப்பு எனக் கணக்கிடத் தொடங்கினால், கணிதத்தில் புதிய எண்கள் பலவற்றைக் கண்டு பிடிக்க வேண்டியிருக்கும்.

அந்த அளவிற்கு அன்னியர்கள் அழித்து விட்டார்கள். எந்தப் படை யெடுப்பாலும் அழிக்கவே முடியாத, கொள்ளையடிக்கவே முடியாத இந்தியாவின் ஞானமனைத்தும் கொள்ளைக்காரர்களின் பிற்போக்குத்தனமான, முட்டாள் தனமான, கருத்துப் போர்களால் முடக்கப் பட்டன.

அவ்வாறு அழிக்கப் பட்டதில், முடக்கப் பட்டதில், மறைக்கப் பட்டதில் முதல் இடத்தில் இருப்பது அழிக்கவே முடியாத ஒரு பேருண்மை.

அது உலகையே உருவாக்கிய உண்மை.

உலகையே ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும் உண்மை.

உலகம் உள்ள வரை உலகை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கக் கூடிய உண்மை. உயிர்கள் அனத்திற்கும் பொதுவான உண்மை. உயிரினம் உள்ளளவும் மாறாமல் இருக்கக் கூடிய உண்மை.

மறுக்கப்பட்ட உண்மை. மிகக் கொடூரமாக எதிர்த்து வாதிடப்பட்ட உண்மை. கொலை பாதகச் சித்திரவதைகளுக்கு ஆளான உண்மை. ஆனால், எவராலும் கொல்ல முடியாத உண்மை. இப்போது அறிவியல் துணையுடன் கொஞ்சம் கொஞ்சமாகக் கசிந்து வெளியாகிக் கொண்டிருக்கிற உண்மை.

***பேருண்மைகள் நீர்க் குமிழி போன்றவை. அவற்றை யாராலும் நிரந்தரமாக மறைத்து விட முடியாது. ஒதுக்கி விட முடியாது. எதிர்த்து நிற்க முடியாது. தொடர்ந்து எதிர் வாதாட முடியாது. அழித்து விட முடியாது என்பதைக் கூட உலகிற்கு உணர்த்தக் கூடிய உண்மை.***

குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் விலங்காக இருந்த மனிதனை அறிவியல் அறிஞனாய் உருமாற்றிய உண்மை.

மானிடரின் மனதை என்றென்றும் ஆளப் போகின்ற உண்மை.

அப்படிப்பட்ட ஒரு பேருண்மையையும் கண்டு பிடித்து உலகிற்குக் கொடையளித்த பெருமை இந்திய ஞானிகளுக்கு உண்டு.

காமம் புனிதமானது. கலவி வழிபடத் தக்கது. அபரிமிதமான காம உணர்வு இருப்பது ஒரு வரம். உயிர் மட்டுமல்ல, மனிதப் பண்புகள் அனைத்துமே உருவாவதற்கும் காமமே காரணம். பண்புகள் உருவாக மட்டுமல்ல. ஒவ்வொரு கலை உருவாகவும் காமமே காரணம். கலை உருவாக மட்டுமல்ல கருணையும் இரக்கமும் மனித மனதில் உருவாகவும் காமமே காரணம்.

காமம் இல்லாமல், மனித இனத்தை வளர்ச்சிப் பாதையில் கொண்டு செல்கின்ற எவ்வித உருவாக்கமும் சாத்தியம் இல்லை.

மனிதனின் மூளை முழு ஆற்றலுடன் செயல்பட்டிட, எல்லைகள் கடந்து கற்பனை விரிந்திட, விரிந்த கற்பனை வடிவம் பெற்றிட என மனித சாதனைகள் அனைத்திற்கும் மூலமாயிருப்பது காமமே என்கிற உண்மையை முதன் முதலாகக் கண்டறிந்து, அதை மனித சமூகத்திற்குக் கொடையளித்த தேசம் இந்திய தேசம்.

மேலும் இதை உணர்த்தவே இந்திய ஞானிகள் கலவி நிலையை வழி படக்கூடிய வடிவமாக உருவகப் படுத்தினர்.

இது என்றென்றும் மாறாத உண்மை என்பதைப் புலப்படுத்தவே, உறுதிப் படுத்தவே சிற்பங்களாக இதை வடித்து வைத்தனர்.

அனைவர் கண்களுக்கும் இது தெளிவாகத் தெரிய வேண்டும். அத்தனை மனிதர்களும் இதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே கோவில்களில் அதைப் பதித்து வைத்தனர்.

அது மட்டுமல்ல.

ஆண் என்பவன் சக்தி மிக்கவன். ஆனால் இயல்பான நிலையில் அவனுடைய சக்தி அழிவு சக்தியாக, நாசகாரச் சக்தியாக, அழிக்கும் சக்தியாகவே இருக்கும். அவ்வாறு உள்ள சக்தியை உருவாக்கும் சக்தியாக திசை மாற்றுபவள் பெண்.

ஆகவே ஆணின் சக்தியானது தனது அழிக்கும் இயல்பை மறந்து, உருவாக்கப் பாதையை நோக்கித் திரும்பிட, அவ்வாறாக அதை உருமாற்றிட ஒவ்வொரு ஆணுக்கும் ஒரு பெண் தேவை.

பெண் இல்லாவிட்டால், ஆணின் சக்தி அழிவு சக்தியாக, நாசகாரச் சக்தியாக அழிக்கும் சக்தியாகவே இருக்கும். இலடசத்தில் ஒரு ஆண் விதிவிலக்கு.

இவ்வாறாக, ஆணின் சக்தியை உலகிற்கு பயன்படத்தக்க சக்தியாக மாற்றக்கூடிய மூல சக்தி பெண்ணே.

ஆகவே பெண் வணங்கத் தக்கவள். தேவதையைப் போல பராமரிக்கத் தக்கவள். சிறந்த மனநிலைக்கு உரிமையுடை யவளாகப் போற்றி வளர்க்கத் தக்கவள் என்பதை மனித சமூகத்திற்கு உணர்த்தியவர்கள் இந்திய ஞானிகள்.

எந்தக் குழந்தையும் பிறர் சொல்வதைக் கேட்பதன் மூலமாகத் தன் பண்பாற்றலை வளர்த்துக் கொள்வதில்லை.

எதையெல்லாம் சிறு வயதில் பார்க்கிறதோ அதன் அடிப்படையிலேயே ஒவ்வொரு குழந்தையும் தன்னுடைய பண்பைப் பெறுகிறது. அவ்வாறு பெற்ற பண்புகளை அடுத்த தலைமுறைக்கும் எடுத்துச் செல்கிறது.

பிஞ்சுக் குழந்தைகள் தாயைப் பார்த்தே வளரக் கூடியவை.

தந்தை என்பவன் மந்திரங்களைக் கற்றுத் தரும் உவாத்தி மட்டுமே.

மந்திரங்களைப் பயன்படுத்துவது குழந்தையின் மனோபாவத்தைப் பொறுத்தது.

மனோபாவம் தாயிடமிருந்தே பெறப்படுவது.

ஏனெனில், முதல் ஏழாண்டுகளில் ஒரு மனிதனின் மனோபாவம் உருவாகி விடுகிறது. குழந்தையின் முதல் ஏழாண்டுகள் தாயுடன் தான் மிக அதிகமாகக் கழிகின்றன.

அதாவது குழந்தையின் முதல் அறுபதாயிரம் மணி நேரத்தில், ஆறாயிரம் மணி நேரத்தைப் பள்ளியிலும், நான்காயிரம் மணி நேரத்தை மற்றவர்களிடமும் செலவளித்தது போக மீதமுள்ள ஐம்பதாயிரம் மணி நேரத்தையும் தன் தாயுடன் தான் குழந்தை செலவிடுகிறது.

ஆகவே தன் தாயைப் பார்த்தே ஒவ்வொரு குழந்தையும் வளர்கிறது. அதனால், தாயின் செயல்கள் தான் குழந்தையின் எதிர்காலத்தை உருவாக்கும் காரணிகளாக இருக்கின்றன.

ஒரு பெண்ணால் மட்டுமே தலைமுறைகள் கடந்தும் நிற்கக் கூடிய பண்பாற்றலை உருவாக்க முடியும்.

ஆகவே, பெண்ணைப் பண்புடையவளாக, நல்ல மனநிலை கொண்டவளாக வளர்க்க வேண்டும்.

வெற்றி தோல்விகளின் மூலப் பொருள் மனநிலை.

மனநிலையோடு ஒப்பிடும் போது அறிவென்பது குப்பைக்குச் சமம்.

மிகப் பெரிய அறிவாளிகளின் தோல்விக்கெல்லாம் அவர்கள் மனநிலையே மூலகாரணம்.

உலகளவு அறிவிருந்தாலும் மனநிலை சரியில்லையேல், அந்த அறிவு அழிக்கும் சக்தியாகி விடும். அல்லது பயன்படுத்தப் படாமலே வீணாகப் போய் விடும்.

மனநிலை தான் ஒரு மனிதனின் மிகப் பெரிய சொத்து.

வாழ்வில் சாதிக்க விரும்புபவர்கள், வெற்றி பெற விரும்புபவர்கள், மனநிலையைப் பாதுகாப்பாய் வைத்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். அந்த மனநிலையை உருவாக்குபவள் பெண்.

ஆகவே பெண்ணின் மனநிலை பாதுக்காக்கப் பட வேண்டும்.

ஒவ்வொரு ஆணும் தன் மனைவியை ஒரு தேவதையைப் போல வைத்தி ருக்க வேண்டும்.அவ்வாறு தேவதையைப் போல் தன் மனைவியை வைத்திருந்தால், கணவனுடைய வாழ்க்கையை மட்டுமல்ல, தன் சுற்றுப்புறம் முழுவதையும் அவள் சொர்க்கமாக வைத்திருப்பாள்.

மேலும், தேவதையைப் போலத் தன் மனைவியை வைத்திருப்பது என்றால், காஞ்சிபுரம் சேலையைக் கட்டி, சுமக்க முடியாத அளவிற்கு நகைகளை அணிவித்து அழகு பார்ப்பதல்ல. முதலில் பெண்ணின் உடற் தேவைகள் அனைத்தும் பூர்த்தி செய்யப்பட வேண்டும்.

உடற் தேவைகளே மனிதப் பிறவியின் முதற் தேவைகள். அடிப்படைத் தேவைகள். ஆகவே, மனைவியின் முதற் தேவையான உடற் தேவைகளை முதலில் பூர்த்தி செய்ய ஒவ்வொரு கணவனும் கற்றுக் கொள்ள வேண்டும் எனப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எடுத்துச் சொன்னவர்கள் இந்திய ஞானிகள்.

இந்திய தேசத்தால் அளிக்கப் பட்ட ஞானத்தைத் தேடி இமயமலைக்கு வராத புனிதர்கள் யாருமே கிடையாது. ஒவ்வொரு புனிதரும், மக்களின் மீட்பரும், தங்கள் வாழ்வில் குறிப்பிட்ட சில ஆண்டுகளை இமய மலையிலே கழித்தி ருக்கிறார்கள். இந்திய ஞானிகளிடம் கற்றவற்றை வைத்துத் தங்கள் தத்துவங் களையும், கோட்பாடுகளையும் உருவாக்கியிருக்கிறார்கள்.

மனித நாகரீகத்தின் துவக்க காலத்தில் உலகம் முழுவதும் ஒரே மதம் தான் இருந்திருக்கிறது. அதன் தலைமையகமாக இமய மலை திகழ்ந்திருக்கிறது

என்கிற கூற்றை மெய்ப்பிக்கும் விதமாக, ஆசிய, சுமேரிய, மெசபடோனிய, எகிப்திய, கிரேக்க, ரோமானிய, பாபிலோனிய நாகரீகங்கள் அனைத்திலும் பொதுவான ஒரு வடிவம் வழிபடத் தக்கதாய் இருந்திருக்கிறது.

அந்த வழிபடும் வடிவங்கள் இன்றளவிலும் அங்கெல்லாம் இருக்கின்றன. சில இடங்களில் வழிபடப் படுகின்றன. சில இடங்களில் வழிபடும் வழக்கம் மட்டும் மறைந்து விட்டது என்பது மட்டுமே ஒரு கொசுறுத் தகவல்.

ஆகவே, காமத்தின் உண்மையான சக்தியை உணர்ந்திருந்தது மட்டுமன்றி, மனித செயல்கள் அனைத்தும் காமத்தின் வெளிப்பாடுகளே என்று உலகிற்கே உணர்த்திய பூமி, இந்திய பூமி.

ஆனால், அதை பிராய்டும், கின்சியும், கார்ல் ஜங்கும், மாஸ்டர்ஸ் அண்ட் ஜான்சனும், கிரேஃபென் பெர்க்கும், ஆல்ஃபிரேட் கெகலும், நெப்போலியன் ஹில்லும் சொல்லும் உண்மைகளாக உலகம் பார்க்கிறது. உண்மையில் காமம் பாவகரமானது என்கிற கருத்தை உலகில் உருவாக்கியவர்கள் மேற்கத்தியர்கள்.

காமத்தின் மேன்மையைப் பற்றிக் கூறப்படுகின்ற கருத்துக்களையெல்லாம் ஏதோ ஒரு மேற்கத்திய சிந்தனை என்பதைப் போல, தீண்டத் தகாத ஒன்றைப் பார்ப்பது போல், நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

சங்க கால அக இலக்கியங்களும், திருக்குறளும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே இயற்றப்பட்ட செம்மொழி நூல்கள் என்பதையும், ஒரு தார வாழ்வில் காமத்தின் சக்தியைப் பற்றிப் பேசவும் அறிவுறுத்தவும் அவை கடுகளவு கூடத் தயங்கவில்லை என்பதையும் முற்றிலும் மறந்து விட்டு, காமத்திற்கு எதிராக நம்மில் சிலரே கூட பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

மனிதப் பிறவியின் ஒவ்வொரு செயலையும் தீர்மானிக்கும் சக்தியாகத் திகழ்ந்து கொண்டிருக்கின்ற காமத்திற்கு சாஸ்திரம் பாடி, சூத்திரம் எழுதி, இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பே, மனித குலத்திற்குக் கொடையளித்துள்ள தேசம் நமது இந்திய தேசம்.

ஞானிகளுக்கெல்லாம் ஞானியாகத் திகழ்ந்து கொண்டிருக்கின்ற, ஒரு மகா ஞானியால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, பத்தாயிரம் சுலோகங்களில் காமசாஸ்திரம் இயற்றப்பட்டது.

அப்போது ஓலையில் எழுதும் வழக்கம் கூடக் கண்டு பிடிக்கப் பட வில்லை. அதனால், சித்தர்களால் செவிவழி அறிவாகவே பல்லாயிரம் ஆண்டுகள் அந்த சுலோகங்கள் பாடப்பட்டு வந்தன. அதன் காரணமாக ஏராளமான சுலோகங்கள் மறக்கப் பட்டு, வெறும் ஐநூறு சுலோகங்களாக காம சாஸ்திரம் குறுகிப் போயிற்று.

அவ்வாறு குறுகிப் போன ஐநூறு சுலோகங்கள் தான் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் வாத்சாயன முனிவரால் காம சூத்ராவாக எழுத்து வடிவம் பெற்றது.

கூடவே, கஜுராகோ கோவிலில் அவையனைத்தும் அழியாத சிற்பங்களாகவும் செதுக்கி வைக்கப்பட்டது. ஒரே நேரத்தில் மூன்று பெண்களின் காம உணர்வைத் தன்னந்தனியாக ஒரு ஆண் திருப்தி செய்யும் சிற்பம் இன்றளவிலும் அங்கே இருக்கிறது.

அதன் பின், ஒவ்வொரு சித்தரும் அவரவர் காலத்தில் நூல்களாக வடித்து வைத்தனர். அவ்வாறு எழுதப்பட்ட நூல்களில் மக்கள் கைக்குக் கிடைக்கக் கூடிய வகையில், அனங்க ரங்கா, ரதி ரகசியங்கள், ரதிரத்ன பிரதீபிகா, மணக்கும் தோட்டம், போன்ற முப்பது நூல்கள் மட்டுமே இருக்கின்றன.

இவையனைத்தும் உலகில் உள்ள பெரும்பாலான நாடுகளில் கிடைக்கப் பெறுகிற நூல்கள். அறிஞர்கள் அத்தனை பேராலும் படிக்கப் படுகின்ற, புத்திசாலித் தனமாக வாழ்க்கையில் பின் பற்றப் படுகிற நூல்கள்.

ஆனால், ஆங்கிலப் புலமையுள்ள ஒரு சிலரைத் தவிர, பெரும்பாலான இந்தியர்களின் பார்வையில் மேற்கண்ட நூல்கள் படுவதேயில்லை. தவறிப் பட்டு விட்டாலும், காமம் குறித்த தவறான கருத்தால், பெரும்பாலான இந்தியர்கள் மேற்கண்ட நூல்களைப் புறக்கணித்து விடுகிறார்கள். அதனால், ஆண்களில் பலர் பாலியல் அறியாமை மிக்கவர்களாக இருக்கிறார்கள்.

மனைவியை போகப் பொருளாக நடத்துதல், வீட்டிற்குள்ளேயே வன் கொடுமை, இரவு நேரச் சண்டை போன்ற மடமைகளுக்கு அந்த அறியாமை தான் வித்திடுகிறது. அந்த அறியாமை தான், பல ஆண்களைக் குடிகாரர்களாக உருமாற்றுகிறது. குடும்ப வாழ்க்கையை வாழும் நரகமாக மாற்றிக் கொண்டி ருக்கிறது. அதனால், குடும்ப அமைப்பே கூடத் தகர்க்கப் பட்டு விடுமோவென அஞ்சும் அளவிற்கு நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறது.

பகிரங்கமாகப் பகிர்ந்து கொள்ள முடியாமல் பல ஆண்கள் மனதிற்குள் புழுங்கிக் கொண்டிருக்கிறார்கள். கிடைத்த மடியில் முகத்தைப் புதைத்துக் கதறிக் கொண்டிருக்கிறார்கள். கதறியழக் கூட மடி கிடைக்காதவர்கள் தங்கள் கனவுகளைத் தொலைத்து விட்டு, பொறுப்பற்ற பராரிகளாக, குடிகாரர்களாக மாறிக் கொண்டிருக்கிறார்கள்.

கோழைகளாக இருப்பவர்கள், உலகை எதிர்கொள்ள முடியாமல், தற் கொலை செய்து கொள்கிறார்கள். உயிர்வாழ முயற்சிப்பவர்களின் ஆயுள் கூட, மனத் துயரம் காரணமாக குறைந்து போகிறது. இல்லற வாழ்வின் இன்றைய நிலைமை அந்த அளவிற்குக் கொடூரமானதாக மாறிக் கொண்டிருக்கிறது.

***அதாவது, மனைவியின் உடற் தேவையைப் பூர்த்தி செய்யத் தெரியாத ஆணின் பாலியல் அறியாமை காரணமாக இல்லற வாழ்க்கை நரகமாக மாறிக் கொண்டிருக்கிறது.***

மேற்கண்ட நிலைமையையும் வெற்றிகரமாக எதிர் கொண்டு, குடும்ப வாழ்க்கையைச் சொர்க்கமாக மாற்றிக் கொள்வதற்குரிய ஞானத்தை, இந்திய ஞானிகள் அளித்துச் சென்றிருக்கிறார்கள்.

அந்த ஞான வழிமுறைகளைத் தான், சமஸ்கிரதப் புலமையோ, ஆங்கிலப் புலமையோ அல்லது சங்கத் தமிழ்ப் புலமையோ இல்லாத சாமான்ய குடும்பத் தலைவர்களோடு, இன்றைய வார்த்தைகளில் இந்த நூல் பகிர்ந்து கொள்கிறது.

இந்தியா என்கிற புனித மண்ணின் முன்பும், இப் புனித மண்ணில் தோன்றி மனித குலத்திற்கு அளப்பரிய சேவை புரிந்துள்ள இந்திய ஞானிகள் முன்பும், நெடுஞ்சாண்கிடையாய் விழுந்து வணங்கி, தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, நூல் தன் பயணத்தைத் துவக்குகிறது.

# என்னுரை

இமயமலையில் வாழ்ந்த ஒரு ஞானி கூறினார். உலகத்தை ஒரு வீடாக உருவகப் படுத்தினால், அந்த வீட்டிலுள்ள பூஜையறை தான் இந்திய தேசம்.

இந்தியன் என்கிற முறையில், இந்தக் கூற்றைக் கேட்க மிகவும் பெருமிதமாக இருந்தது. ஆனால், அதே ஞானி அடுத்த நாளே கூறினார்.

இந்தியா ஒரு வகையில் பாவப் பட்ட நாடு.

ஒரே நாளில் நேரெதிராக முரண்பட்டு பேசுகிறாரே என்று எண்ணி முடிப்பதற்குள் ஞானி கூறினார்.

ஆம். இந்தியா ஒரு வகையில் பாவப் பட்ட நாடு. ஏனெனில் இந்தியாவில், ஒரே ஒரு ஞானி கூடத் தோன்றியதேயில்லை.

அந்த பதில் அதிர்ச்சியை மேலும் அதிகரித்தது.

எண்ணிலடங்கா ஞானிகள் தோன்றிய புண்ணிய பூமி நம் இந்திய பூமி.

இமயமலை என்கின்ற ஞானப் பூங்காவில் பயிற்சி பெறாத ஞானிகள் யாருமேயில்லை. உலகின் அத்தனை தத்துவங்களுக்கும் விதைகளை வழங்கிய ஞான பூமி இது. மேலும் நீங்களே கூட ஒரு ஞானியாயிற்றே என்று கேட்ட போது கூறுகிறார்.

இல்லை. இந்திய தேசத்தில் ஞானிகள் தோன்றவேயில்லை. தோன்றிய அத்தனை பேரும் மகா ஞானிகள். அதனால் தான் அவர்கள் கூறிய கருத்துக்கள் முழுமையாக மக்களைச் சென்றடையவில்லை.

உதாரணமாக "கெடுவான் கேடு நினைப்பான்" என்பது ஒரு மகாஞானியின் கூற்று. இதற்குப் பொருள் சொல்பவர்கள் தங்கள் அறிவிற் கேற்ப பொருள்படுத்தி அதை மக்களுக்கு அளிக்கிறார்கள். அது கீழ்க்கண்ட வாறு தான் மக்களைச் சென்றடைகிறது.

"பிறருக்கு கேடு விளைய வேண்டும் என நினைக்காதே. அவ்வாறு நினைத்தால் நீதான் கெட்டுப் போவாய்."

ஆனால், உண்மையில் பாதியை மட்டுமே வெளிப்படுத்துகின்ற ஒரு தவறான விரிவுரை இது.

பொய்யை விட அரைகுறை உண்மை ஆபத்தானது.

ஏனெனில் மேற்கண்ட மகாஞானி கேடு நினைப்பவன் கெட்டுப் போவான் என்று தான் கூறியிருக்கிறார்.

ஆகவே அதன் உண்மையான பொருள் உன் மனதில் எந்தவொரு கெட்ட எண்ணத்தையும் நினைக்காதே. கெட்டதை நினைத்தால் நீ கெட்டுப் போவாய் என்பதாகத் தான் தான் இருக்க முடியும்.

கெட்ட எண்ணம் எது? பிறருக்கு கெட்டது நடக்க வேண்டும் என நினைப்பது மட்டுமே கெட்ட எண்ணம் அல்ல.

அதற்கு மாறாக, "நான் ஒரு ஏமாளி. எனக்குப் போதுமான திறமையில்லை. என்னால் வெற்றி பெற முடியாது. நானெல்லாம் வாழத் தகுதியற்றவன். நான்

ஏமாற்றப் பட்டு விட்டேன். என்னால் எதையும் சாதிக்க முடியாது" என்பதைப் போன்ற எண்ணங்களும் கெட்ட சிந்தனைகளே.

ஆகவே மேற்கண்ட முறையில் கேடான எண்ணங்களை நினைத்தால், அவ்வாறு நினைப்பவன் கெட்டுப் போவான். ஏனெனில் எண்ணம் எவ்வாறோ அவ்வாறு தான் உன் வாழ்க்கை அமையும்.

அதாவது, ஒரு நபர் தன்னை ஒரு ஏமாளி என நினைத்தால் அவரை ஏமாளியாக ஜீவிதம் மாற்றிக் காட்டும்.ஆகவே கெட்ட எண்ணங்களை எண்ணு பவன் கெட்டுப்போவான் என்பது தான் அந்த மகாஞானி கூற வந்த தகவல்.

மேற்கண்ட உதாரணத்தைப் போன்றே மகாஞானியரின் பல தத்துவங்களுக்கு பொழிப்புரை, தெளிவுரை, விளக்கவுரை, விரிவுரை எழுதியோர் மூலத்தைத் திரித்து விட்டார்கள்.

தங்கள் மனநிலைக்கேற்ப மாற்றி எழுதி விட்டார்கள்.

அதனால், மகா ஞானியர் பலருடைய ஞானம் விழலுக்கிறைத்த நீராய் வீணாய்ப் போய் விட்டது.

மகாஞானியர் சொன்னதைச் சொன்னபடி, தகவலைச் சிதைக்காமல் மக்களிடம் கொண்டு செல்ல, சொந்தக் கருத்துக்கள் எதுவுமற்ற அப்பாவிகளே தேவைப் படுகிறார்கள் என்று அந்த ஞானி கூறினார்.

**நான் ஒரு அப்பாவி.**

பெண்ணின் புணர் புழை வேறு. சிறு நீர்ப் புழை வேறு. பாலின்பத்தை அனுபவிப்பதற்கு மட்டுமே பெண்ணின் உடலில் பிரத்யேகமாகப் படைக்கப் பட்டுள்ள பாலுறுப்பு வேறு. இம்மூன்றும் வெவ்வேறு உறுப்புகள் என்கிற அடிப் படைத் தகவல் எனக்குத் தெரியாது.

எனினும், நான் திருமணம் செய்து கொண்டேன்.

பாலின்பத்தின் போது இன்பக் கிளர்ச்சியால் ஆணின் உடல் துடிப்பதை விடப் பத்து மடங்கு கூடுதலாகப் பெண்ணின் உடலைத் துடிக்கச் செய்யக் கூடிய பல்வேறு உச்சகட்ட இன்பங்கள் பெண்ணுக்கு உண்டு என்பதோ, அவையனைத்தும் பெண்ணின் அந்தந்த நேரத்து மன நிலைக்கேற்ப, இருபது முதல் நாற்பது நிமிடங்களில் நிகழக்கூடியவை என்பதோ, அந்த இன்பங்கள் நிகழ்வதற்கும் பெண்ணின் மனநிலைக்கும் இடையே நெருங்கிய தொடர்புண்டு என்பதோ எனக்கு அறவே தெரியாது.

ஆயினும், நான் திருமணம் செய்து கொண்டேன்.

அது மட்டுமல்ல. ஆணின் உடலில் நிகழும் உச்ச கட்ட பாலின்பம் வேறு. விந்து வெளியேற்றம் வேறு என்கிற தகவலைக் கூட நான் அறிந்திருக்கவில்லை.

இருப்பினும், நான் திருமணம் செய்து கொண்டேன்.

காமசூத்ரா, கொக்கோக சாஸ்திரம் போன்ற நூல்களைப் பற்றிக் கேள்விப் பட்டதோடு சரி. கண்ணால் கூடப் பார்த்ததில்லை. இந்த நிலையில் ரதி ரகசியங்கள். அனங்க ரங்கா, நறுமணத் தோட்டம், ரதி ரத்ன மாலிகா, ரதி மஞ்சரி போன்ற காமசாஸ்திர நூல்களைப் பற்றியெல்லாம் நான் கேள்விப் பட்டது கூட இல்லை.

ஆனால், நான் திருமணம் செய்து கொண்டேன்.

ஒரு பெண்ணின் உடலில் நிகழும் பாலின்பமே நிம்மதியான குடும்ப வாழ்க்கைக்கான அடித்தளம். ஆகவே, திருமண வாழ்க்கையைத் துவக்க விரும்பும் ஒவ்வொரு ஆணும், பெண்ணுக்குரிய உச்சகட்டப் பாலின்பங்களைத் தவறாமல் வழங்கக் கூடிய பாலியல் அறிவை பெற்றுக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம் என்கிற தகவலும் எனக்குத் தெரியாது.

அதனால், எந்தவொரு பாலியல் அறிஞரின் ஆலோசனையையும் பெற்றுக் கொள்ளாமலே, அது அவசியம் என்பதைக் கூட அறியாத நிலையிலேயே நான் திருமணம் செய்து கொண்டேன்.

**ஒரு ஆணாகப் பிறந்திருப்பதே பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதற்குப் போதுமான தகுதி என்றே நம்பிக் கொண்டிருந்தேன். மனைவியைக் கருத்தரிக்கச் செய்வதே அவளுக்குரிய இன்பங்களை வழங்கி விட்டதற்கான ஆதாரம் எனக் கருதிக் கொண்டிருந்தேன்.**

கருத்தரிப்புக்கும், பெண்ணின் பாலின்பத்துக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. ஒரே ஒரு முறை கூட இன்பத்தை அனுபவிக்காமலே ஒரு பெண்ணால் பத்து முறை வேண்டுமானாலும் கருத்தரிக்க முடியும் என்கிற தகவல் எனக்குத் தெரியாது. ஆயினும், நான் திருமணம் செய்து கொண்டேன்.

பாலியல் மூடனாக இருந்த போதிலும், காதல் புரிவதில் நான் திறமையான கணவனென்றும், என் மனைவியைத் தாய்மையுறச் செய்ததே அதற்கான அடையாளம் என்றும் நம்பிக் கொண்டிருந்தேன்.

குடும்ப வாழ்க்கைக்கே அடித்தளமாக விளங்கக் கூடிய, தம்பதியரிடையே ஏற்படக்கூடிய அன்பிற்கே மூலப்பொருளாக இருக்கக் கூடிய, இல்லற வாழ்வில் நிலவ வேண்டிய நிம்மதிக்கே ஆதாரமாகத் திகழக் கூடிய பாலுறவு குறித்து, மேலே சொல்லப் பட்டதைப் போன்ற நம்பிக்கைகளோடு தான் என் குடும்ப வாழ்க்கையை நான் துவக்கினேன்.

**என்னுடைய நம்பிக்கைகள் மிகவும் அப்பாவித் தனமானவை என்பது எனக்கு அறவே தெரியாது.**

எனினும் என்னைப் பொறுத்த வரை, மண வாழ்க்கை சொர்க்கமாகத் தான் இருந்தது. என் மனைவி கருவுற்றார். வளைகாப்பு விழா நடத்தி, பிரசவத்திற் காகப் பிறந்தகம் அழைத்துச் செல்லப் பட்டார்.

என்னுடன் அவர் இருந்த வரை, சொர்க்கமாக இருந்த வாழ்க்கை, அதன் பின் நேரெதிர்த் திசையிலிருந்த நரகத்தை நோக்கி பயணிக்கத் துவங்கியது.

என் குழந்தையோடு மனைவி வருவார் என நான் பெரும் ஆவலோடு காத்திருந்தேன்.

ஆனால், பல வழக்குகளின் தாக்கீதுகள் தான் வந்தன.

எந்த விநாடி மண வாழ்விற்குள் சட்டம் நுழைந்ததோ, அந்த விநாடியே எங்களுக்குள் இருந்த அன்பும், நம்பிக்கையும் காணாமற் போயின.

முன்வாயில் வழியாக சட்டம் நுழைந்த போது, பின் வாயில் வழியாக இல் வாழ்க்கையின் அன்பும், நம்பிக்கையும் தப்பித்து ஓடி விட்டன. அதன் மூலம் பத்தே மாதங்களில் என் மண வாழ்க்கை முடிந்து போயிற்று.

அதன் பின் வழக்குகளின் பின்னால் மூன்றாண்டுகளுக்கும் மேல் ஓடினேன்.

அந்த வழக்குகளின் படி நான் ஒரு பொறுப்பற்ற குடிகாரன்.

வன்முறையாளன்.

நள்ளிரவென்றும் பாராமல், மனைவியை வீட்டை விட்டு விரட்டியடித்த ஒரு கொடூரன்.

மனைவியுடனும், குழந்தையுடனும் சேர்ந்து வாழ மறுக்கக் கூடிய கணவன்.

என்னைப் பற்றி அவ்வாறு தான் வழக்குகள் கூறின.

மேற்கண்டவை பற்றி நான் நினைத்துக் கூடப் பார்த்ததில்லை.

என் மனைவியையும், குழந்தையையும் பிரிந்து வாழ்வதை விட செத்துப் போகவே நான் தயாராக இருந்தேன்.

அதனால், என் குடும்பத்தை என்னிடம் கொண்டு வர என்னால் முடிந்த அத்தனை விதமான முயற்சிகளையும் மேற்கொண்டிருந்தேன்.

உறவினர்கள் மூலமாகவும், பொது மனிதர்கள் மூலமாகவும் எவ்வளவோ பேசிப் பார்த்தேன்.

சேர்ந்து வாழ்வதற்காக என் மனைவி விதிக்கின்ற எந்த நிபந்தனையையும் ஏற்றுக் கொள்ளவும் தயாராக இருந்தேன்.

நீதிமன்றம் வாயிலாகவும் அழைத்துப் பார்த்தேன்.

என் மனைவியோடு சேர்ந்து வாழ்வதன் பொருட்டு, அவருடைய சொந்த ஊருக்கே குடிபெயரவும் நான் தயாராக இருந்தேன்.

எனினும், என்னை ஏறெடுத்துப் பார்க்கக் கூட என் மனைவி மறுத்து விட்டார்.

என் பூர்வீகச் சொத்துக்களிலிருந்து தனக்கும், என் குழந்தைக்கும் சட்ட பூர்வமாக வரவேண்டிய பங்கைப் பெறுவதைத் தவிர, வேறெந்த சமரச முயற்சியையும் ஏற்க என் மனைவி மறுத்து விட்டார் என்பதே உண்மை என்கிற தகவல் இங்கே சொல்லியாக வேண்டிய ஒரு கொசுறுத் தகவல்.

திடீரென வாழ்க்கை இருண்டு போயிற்று.

விடியலுக்கான நம்பிக்கையே இல்லை.

சமூகத்தை எதிர்கொள்ள மிகவும் அவமானமாக இருந்தது.

பகைக்கு என்ன காரணம் என்பது தெரியாமலே, சட்டப் படி வெல்லவே முடியாத ஒரு நபரிடம் நான் மாட்டிக் கொண்டேன்.

பத்தே மாதங்களில் என் குடும்ப நிறுவனம் சிதறிப் போயிற்று.

என் குழந்தையோடு கூடி வாழும் உரிமையைப் பறி கொடுத்தேன்.

சுதந்திரமாகப் பாலுறவு கொள்ளும் வாய்ப்பையும் இழந்தேன்.

பத்தே பத்து மாதங்கள் ஒரு பெண்ணுடன் வாழ்ந்ததற்காக, என் பரம்பரைச் சொத்துக்களில் சரி பாதியை இழப்பீடாகக் கொடுக்க வேண்டியதாயிற்று.

ஒரு பகற் கொள்ளையின் மூலமாக, என் மூதாதையரின் சொத்துக்கள் என்னிடமிருந்து அபகரிக்கப் பட்டன.

என் இளமைக் காலத்தின் பொன்னான வருடங்கள் பலவற்றை மன வேதனைக்குப் பலி தர வேண்டியதாயிற்று.

திருமண முறிவால், என் குழந்தைக்கு ஏற்பட்ட நேரிடையான பொருளாதார இழப்பு இன்றைய மதிப்பில் பதினைந்து கோடி ரூபாயையும், எனக்கு ஏற்பட்ட தனிப்பட்ட இழப்பு பல கோடி ரூபாயையும் தாண்டி நிற்கிறது.

இதைத் தவிர, குழந்தை இழந்த மறைமுக இழப்புக்கள் ஏராளமானவை.

அந்த இழப்புக்களிலிருந்து ஒரு தந்தையாக என் குழந்தையைக் காக்க என்னால் முடியவில்லை.

திருமணம் என்பது ஆணின் கைகளில் பூட்டப் பட்டுள்ள விலங்காகவும், பெண்ணின் கையில் உள்ள கண்ணாடிக் குடுவையாகவும் இருப்பதை அனுபவ பூர்வமாக நான் அறிந்து கொண்டேன்.

ஆனால், அந்தக் குடுவை உடைக்கப் படுவதற்கான உண்மையான காரணத்தைக் கூடத் தெரிவிக்காமலே, குடிகாரனென்றும், வன்முறையாளனென்றும் பொய்யைக் கூறி உடைக்கப் பட்டது தான் தாங்கொணாத் துயராக இருந்தது.

அதனால் பெண் இனத்தின் மீதே கடுமையான காழ்ப்புணர்ச்சி ஏற்பட்டது.

ஏன் தண்டிக்கப் பட்டிருக்கிறோம் என்பதே தெரியாத நிலையில் தண்டனையை அனுபவிக்கும் போது ஒரு ஆணுக்கு ஏற்படும் வலி விவரணைக்கு அப்பாற்பட்டது.

இந்தக் கொடூரத்தை எதிர்கொள்ளும் ஒரு ஆண் வழி தவறிப் போய் விடும் வாய்ப்புக்களே மிகவும் அதிகம்.

குறைந்த பட்சமாக ஐவகை விபத்துக்களை அவன் சந்திக்க நேரிடும்.

முதல் விபத்து. ஒரு குடிகாரனாகக் கூடும்.

ஆனால் என் வாழ்வில் இது பயனளிக்காது.

சட்டப்படி மட்டுமே நான் ஒரு குடிகாரன்.

ஆனால் நடைமுறை வாழ்விலோ மதுவின் எதிரி.

காந்தீய அமைப்புக்களின் மதுவிற்கெதிரான பல போராட்டங்களைத் தலைமையேற்று நடத்திய வரலாறு கூட எனக்குண்டு.

அதை விட முக்கியமாக மதுவின் நெடி கூட எனக்கு ஒத்துக் கொள்ளாது.

மது அருந்திய நபரிடம் நெருங்கி நின்று ஒரிரு நிமிடங்கள் பேசினாலே, எனக்கு தலைவலி வந்து விடும்.

என் உறவினர்களோ நண்பர்களோ மது அருந்திய நிலையில் என் அருகில் வர மாட்டார்கள்.

என்னிடம் பணியாற்றும் ஊழியர்கள் எதிரில் கூட வர மாட்டார்கள்.

நான் பயணிக்கும் காருக்குள் மதுவருந்திய நிலையில் யாரேனும் இருந்தால், அவர் இறக்கி விடப்படுவார். அல்லது நான் இறங்கிக் கொள்வேன்.

மதுவின் நெடியைக் கூட என்னால் சகித்துக் கொள்ள முடியாது.

என் ஆழ் மனம் அந்த அளவிற்கு மதுவிற்கு எதிரானதாக உருவாக்கப் பட்டிருக்கிறது.

ஆகவே, மதுப் பிரியனாக மாறக் கூடிய விபத்து என் வாழ்வில் நடக்க கடுகளவும் இடமில்லை.

இரண்டாவதாக, தவறான சேர்க்கைகள் மூலம், பொறுப்பற்ற தறுதலை யாகக் கூடும். ஆனால், நான் வளர்ந்த சூழல் தறுதலையாகி விடக்கூடிய விபத்திலிருந்தும் என்னைக் காப்பாற்றி விட்டது.

மூன்றாவதாக, பைத்தியம் பிடிக்கக் கூடும். ஆனால், என்னிடமிருந்த சுயமாகச் சிந்திக்கும் திறன் காரணமாக, அந்த விபத்தும் நேரவில்லை.

அடுத்ததாக, வாழ்க்கையையும், பணத்தையும், குழந்தையையும், சமூக மரியாதையையும் ஒருங்கே பறி கொடுத்த மன வலியைத் தாங்கிக் கொள்ளும் திறனின்றி, தற்கொலை செய்து கொள்ளக் கூடும்.

எனக்கும் அந்த எண்ணம் வந்தது.

ஆனால் போதுமான கோழைத்தனம் என்னிடம் இல்லை.

ஐந்தாவதான ஒரு விபத்து சன்னியாசியாகலாம்.

நான் கூசாமற் சன்னியாசம் பெற்றேன்.

உடனடியாக ஒரு மடத்தில் சேர்ந்தேன்.

சில தினங்களிலேயே சன்னியாச தீட்சை பெற்றேன்.

ஆனால், வாழ்க்கையைத் துறப்பதற்காக அந்த மடம் தீட்சை அளிப்பதில்லை என்பது அந்தத் தீட்சையை வாங்கிய பிறகு தான் தெரிந்தது.

வாழ்க்கையைக் கொண்டாடி மகிழவே சன்னியாச தீட்சையை அளித்துக் கொண்டிருக்கிறது அந்த மடம்.

இந்த தகவல் மிகவும் அதிசயமாக இருந்தது.

வாழ்க்கையைக் கொண்டாட சன்னியாசமா?

ஆனால் அந்த மடம் அப்படித்தான் கூறியது.

இப்போதும் கூட அப்படித் தான் கூறுகிறது.

அந்த மடம் பகவான் ஓஷோவின் உலகம்.

அந்த புண்ணிய பூமிக்குள் அடியெடுத்து வைத்த பிறகு தான், நான் புதுப் பிறவி எடுத்தேன்.

என் கண்கள் திறந்தன.

உண்மையான ஒளி எதுவென்று தெரியத் துவங்கியது.

என் மனைவி குற்றவாளி அல்ல. அவர் ஒரு நோயாளி. நான் அவரை ஒரு போகப் பொருளாக நடத்தியிருக்கிறேன். அதனால், பாலின்ப ஆற்றாமை என்கிற நோயால் அவர் பாதிக்கப்பட்டிருக்கிறார்.

அந்த நோயால் ஏற்பட்ட மன பாதிப்புக்களே எனக்கு எதிராக அவரைச் செயல் பட வைத்திருக்கிறது.

அந்தநோய் ஏற்பட்டதற்கு அவரது கணவனான அடியேனே காரணம்.

அதற்குக் காரணம், என்னிடம் குடி கொண்டிருந்த பாலியல் அறியாமை.

என்னை உயிரோடு விட்டுச் சென்ற என் மனைவியின் பெருந்தன்மைக்கு நான் மனப்பூர்வமாக நன்றி செலுத்தினேன்.

ஏனெனில், பாலின்ப ஆற்றாமை என்னும் நோய் பெண்ணைப் பிடாரியாக மட்டுமல்ல, கொலைகாரியாகக் கூட மாற்றும் வல்லமை மிக்கது.

கணவனைக் கொலை செய்த மனைவியைப் பற்றியும், குழந்தையைத் தண்ணீர்த் தொட்டிக்குள் மூழ்கடித்துக் கொலை செய்த தாயைப் பற்றியும், எத்தனையோ செய்திகளைப் படிக்கிறோமல்லவா?

அவையெல்லாம் அந்தந்த பெண்களைப் பீடித்திருந்த பாலின்ப ஆற்றாமை என்கிற மனநோயின் ருத்ர தாண்டவங்கள்.

இவ்வாறு மனைவியைப் பீடித்த பாலின்ப ஆற்றாமை நோயின் ருத்ர தாண்டவத்திற்கு தங்கள் வாழ்க்கையைப் பறி கொடுத்த கணவர்களில் நான் முதல் நபரும் அல்ல.

முடிவான நபரும் அல்ல.

எனக்கு முன்பும் சரி, பின்பும் சரி, எத்தனையோ ஆண்கள் வாழத் துவங்கும் முன்பே தங்கள் வாழ்க்கையை இழந்திருக்கிறார்கள்.

ஆறு மாதமோ, ஒரு வருடமோ வாழ்ந்ததற்காக, தங்கள் பூர்வீக சொத்துக் களில் சரி பாதியை இழப்பீடாக வழங்கியிருக்கிறார்கள்.

நிம்மதியாக வாழும் வாய்ப்பையும், குழந்தைகளையும் காரணம் தெரியாமலே பறி கொடுத்திருக்கிறார்கள்.

அதனால் ஏற்பட்ட மனவேதனையில் இளம் வயதிலேயே புற்று நோய், மாரடைப்பு போன்ற உயிர்க்கொல்லி நோய்க்கு ஆளாகிச் செத்துப் போயிருக் கிறார்கள்.

சமூகத்தை எதிர்கொள்ள முடியாமல், ஏதேதோ தலைப்புகளின் கீழ் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள்.

குடிகாரர்களாக மாறி, தங்களுடைய பண்பாற்றலை இழந்து, உருத் தெரியாமல் சிதைந்து போயிருக்கிறார்கள்.

இலட்சத்தில் ஒரு ஆண் மட்டுமே அந்த துரோகச் சூழலையே ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு, சமூகத்தில் உயர்வாக வாழ்ந்து காட்டுகிறான்.

கால மாற்றத்தில் ஏற்பட்டுள்ள புது வெள்ளம் அது.

அந்த வெள்ளத்திலே ஒற்றைத் துளி மட்டுமே நான்.

ஆனால் அந்த ஒற்றைத்துளி அப்போது ஒரு முடிவெடுத்தது.

அந்த முடிவிற்குக் காரணம் தண்டனை கொடுத்த வலி.

எதற்காகத் தண்டிக்கப் பட்டிருக்கிறோம் என்பது தெரியாமலே கொடூரமான தண்டனையை அனுபவிக்கும் போது ஏற்படும் வலி, ஒரு மனிதனுடைய சிந்தனை வளத்தைக் கொன்று அவனை ஒரு நடைப் பிணமாக்கும்.

அல்லது அந்த வலிக்குக் காரணமான பிரச்சினையை ஆராய்ந்தறிந்து, அதை வேரடி மண்ணாக அழிப்பதற்குரிய, வழியைத் தேட வைக்கும்.

என் மனதில் பிரச்சினையை வேரடி மண்ணாக அழிப்பதற்குரிய வழி தேடும் வெறி பிறந்தது.

திருமணம் என்பது இரு பாலினத்தின் பாலியல் தேவைகளை முறையான வழிகளில் பூர்த்தி செய்து கொள்வதற்காக உருவாக்கப்பட்டுள்ள களம்.

ஆனால், கணவனின் இன்பத்தை ஐந்து நிமிடத்திற்குள்ளும், மனைவியின் இன்பத்தை ஐம்பது நிமிடங்களிலும் நிகழும் படியான ஏற்றத் தாழ்வோடு மனித இனத்தை இயற்கை படைத்திருக்கிறது.

**இந்நிலையில் ஒரு கணவன் தன்னுடைய மனைவியின் பாலியல் தேவையை நிறைவேற்றுவது எப்படி?**

அதாவது, தன்னுடைய காமத்தைத் தணித்துக் கொள்வதற்கான போகப் பொருளாக மட்டுமே பயன்படுத்தாமல், மனைவியின் காம உணர்வையும் தணிப்பது எப்படி?

காம உணர்வைத் தணிக்கா விட்டாலோ பாலின்ப ஆற்றாமை என்கிற நோய் நுண்ணிய அளவிலாவது மனைவியைத் தாக்கி விடும்.

அந்த நோயின் தாக்குதல் காரணமாக மனைவி தன்னுணர்வற்ற நிலையில் கணவனைப் பழியெடுக்கத் துவங்கி விடுவாள்.

குடும்பம் சிதறலாம்.

சிதறாவிடினும் மனோரீதியாகக் கணவன் துன்புறுத்தப் படலாம்.

அதனால் இல்லற வாழ்க்கை நரகமாகலாம்.

***மிருகங்களைப் பாதுகாக்கக் கூட சட்டங்கள் உள்ளன. மனைவியைக் காப்பாற்ற பிரத்யேகமான சிறப்புச் சட்டங்களே கூட உள்ளன. ஆனால், மனைவியைப் பீடிக்கின்ற பாலின்ப ஆற்றாமை நோயின் தாக்கத்தால், தன்னுணர்வற்ற நிலையிலே, மனைவியால் குதறப்படும் கணவனைக் காப்பாற்ற எந்த நாதியும்,தேசத்தில் இல்லை.***

ஆகவே இதற்கான ஒரு தீர்வைக் கண்டாக வேண்டும்.

பாலின்ப ஆற்றாமை என்கிற மனநோயால் ஏற்படும் ஆழ்மன ஆத்திரம் காரணமாக, கணவனின் வாழ்க்கை கொடூரமான முறையில் மனைவியால் தகர்க்கப் படுவதைத் தடுப்பதற்கு ஏதேனும் வழி இருக்கிறதா?

**பாலின்ப ஆற்றாமை காரணமாக நிகழ்ந்து கொண்டிருக்கும் குடும்ப விவகாரச் சண்டைகளுக்கு ஒரு தீர்வைக் கண்டு பிடிக்க முடியுமா?**

**பாலியல் காரணமாகச் சிதறும் குடும்பங்களைத் தடுப்பதற்கான மந்திரம் ஏதாவது இருக்கிறதா?**

**அனைத்திற்கும் முத்தாய்ப்பாக, உயிருக்குயிரான தங்கள் மனைவியைப் பாலின்ப ஆற்றாமை என்கிற மனநோயே அண்ட விடாமல் தடுப்பதற்கு கணவர்களுக்கான வழிமுறை ஏதேனும் இருக்கிறதா?**

என் தேடல் துவங்கும் முன்பே ஓஷோவின் குடில் தந்த்ராவின் பேரறிவையும், தாவோக்களின் ஞானத்தையும் எனக்கு அறிமுகப் படுத்தியது. அந்த நூல்களைத் தேடி ஓடத் துவங்கினேன்.

அந்த ஓட்டத்தின் போது தான், புதிய பார்வையைக் கொடுத்து, வாழ்க் கையைக் கொண்டாடும் படி வலியுறுத்தக் கூடிய, வற்புறுத்தக் கூடிய பண்டைய இந்தியத் தத்துவங்கள் ஒவ்வொன்றோடும் எனக்கு அறிமுகமாயிற்று.

அப்போது நான் கற்ற பண்டைய இந்திய நூல்களின் சாறு தான் இப்போது உங்கள் கையில் இருக்கிறது.

அன்னிய மொழியாகவே இருப்பினும் ஆங்கிலப் புலமை உள்ளவர்களே இந்தியா வழங்கும் வேலை வாய்ப்பில் முன்னுரிமையைப் பெறுகிறார்கள்.

அதே போல, தாம்பத்யம் குறித்த ஆழமான அறிவும், தெளிவான புரிதலும் கூட ஆங்கிலப் புலமை உள்ளவர்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடிய நிலைமை தான், இந்திய தேசத்தில் நிலவி வருகிறது.

தாய் மொழியை மட்டுமே கற்கும் வாய்ப்பைப் பெற்ற சாமான்யர்களுக்கு, தாம்பத்யம் குறித்த ஆழமான அறிவைப் பெறும் வாய்ப்பு இன்னும் வழங்கப் படவில்லை.

ஏனெனில், சமஸ்கிரத மொழியில் இயற்றப்பட்டுள்ள அனைத்து நூல்களும் ஆங்கிலம், பிரெஞ்சு போன்ற அன்னிய மொழிகளில் பெயர்க்கப் பட்டதைப் போல், இந்திய மொழிகள் அனைத்திலும் பெயர்க்கப் படவில்லை.

தமிழ் மொழியிலேயே சங்க இலக்கியங்கள், திருக்குறள் போன்ற நூல்கள் இருப்பினும் அவற்றின் மொழிநடை இன்றைய வழக்கு மொழியிலிருந்து வெகு தூரம் விலகியிருப்பதால், சாமான்யனுக்கு உதவக் கூடிய வகையில் இல்லை.

அதனால் இந்திய பிராந்திய மொழிகளில் ஒன்றை மட்டுமே அறிந்துள்ள ஏராளமான ஆண்கள் மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தும் இருட்டிலே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அதை விடக் கொடுமை, அந்தக் கும்மிருட்டையே பிரகாசமான ஒளியென்றும் கருதிக் கொண்டிருக்கிறார்கள்.

அதனால், அந்தச் சாமான்யர்களின் இல்லற வாழ்க்கை போர்க்களமாக மாறிக் கொண்டிருக்கிறது.

ஆண்களுடைய பாலியல் அறியாமை தான் குடும்பங்களில் நிலவும் சண்டை சச்சரவுகள் முதல் கள்ளக் காதல் ஈறாக, விவாகரத்து வரையிலான தீமைகள் அனைத்திற்கும் அச்சாரமிடக் கூடிய முதற் காரணியாகி, குடும்ப அமைப்பின் சிதைப்பிற்கு வலிகோலுவதாக இப்போது மாறிக் கொண்டிருக்கிறது.

எண்ணற்ற ஆண்கள் அனாதைகளாக உருவாகிக் கொண்டிருக்கிறார்கள். ஆண் அனாதையாக்கப் படுவதன் மூலம், குழந்தைகளின் மீது தாயை மட்டுமே உறவாய்க் கொண்ட வாழ்க்கை திணிக்கப் படுகிறது.

இது ஒரு மோசமான மாற்றம். இந்த மாற்றத்தால் தேசத்தின் சட்ட ஒழுங்கு

சீர்கெடுகிறது. ஏனெனில், எந்த அளவிற்கு அனாதைகள் பரிதாபத்திற்கு உரியவர்களோ அதே அளவிற்கு ஆபத்தானவர்கள்.

அதனால் தான், எவ்விதப் பாபமும் அறியாத யாரோ பெற்ற குழந்தைகள், இந்த அனாதையாக்கப் பட்ட ஆண்களால் பாலியல் சித்திரவதை செய்யப் பட்டு கால்வாய்களில் தள்ளிக் கொல்லப் படுகிறார்கள்.

சமூக சூழலில் நிலவ வேண்டிய அமைதி பறி போகிறது.

மேற்கண்ட நிலையை முற்றிலும் அழித்தொழிக்கக் கூடிய சக்தி பெற்ற நூல் தான் இப்போது உங்கள் கைகளில் தவழ்ந்து கொண்டிருக்கிறது.

இந்நூலின் அறிவனைத்தும் பண்டைய இந்திய ஞானிகளால் சொல்லப் பட்ட அறிவு.

நூற்றுக்கணக்கான ஞானிகளின் நூல்களைக் கரைத்துக் குடித்ததன் மூலம் பெறப்பட்ட அறிவிலிருந்து பிழிந்தெடுக்கப்பட்ட சாறு.

சொந்த அனுபவம் வாயிலாக உண்மை என்று உறுதி செய்யப்பட்ட அறிவு.

மேலும், நூலிலுள்ள வார்த்தைகளிலும் ஒன்று கூடப் புதியவையல்ல.

ஒவ்வொரு வார்த்தையும் பல்வேறு ஞானியரால் பல்லாயிரக் கணக்கான முறை பயன்படுத்தப் பட்டவை.

**நான் ஒரு சேகரிப்பாளன்.**

**சேகரித்த வார்த்தைகளை என் மொழிப் புலமைக்கேற்ப இன்றைய தமிழில் பெயர்த்து, என் மொழியாளுமைக்கேற்ப, சரமாய்க் கோர்த்திருக்கிறேன்.**

**வார்த்தைகள் இடம் மாறியிருக்கலாம்.**

**ஆனால், ஞானிகளின் கருத்தில் மாற்றமிருக்காது.**

ஏறக்குறைய பதினெட்டு ஆண்டு கால இடையற்ற தேடலின் மூலம் பெற்ற அறிவையே நான் இங்கே பகிர்ந்து கொண்டிருக்கிறேன்.

உணர்ந்தவற்றைப் பிறரோடு பகிர்ந்து கொள்ள, முடிந்தவரை எளிமையாக, எதார்த்தமாக எழுத்து மூலமாய் விரித்துரைக்க முயற்சித்திருக்கிறேன்.

அதன் காரணமாக, பேருண்மைகளில் பலவற்றைப் பகிர்ந்து கொள்வதாக இந்நூல் இருக்கும்.

எண்ணற்ற மக்களுக்கு என்றென்றும், மனித குலம் உள்ள வரை, பயனளிப்பதாக இந்நூல் இருக்கும்.

எளிதில் மறக்க முடியாததாக, தேவைப்படும் சமயங்களில் தயங்காமல் உதவக் கூடியதாக, படித்த பின் தூக்கியெறிந்து விடாமல் பாதுகாக்கப் படும் நூல்களில் ஒன்றாக, நிச்சயம் இந்நூல் இருக்கும்.

மேலும், ஒருவர் சொல்ல விரும்பும் தகவலை, (அதே சமயத்தில் ஏதோ ஒரு காரணத்தால் சொல்ல முடியாமல் தவிக்கும் தகவலை) அவர் சார்பாக வெளிப் படையாகவும், விவேகமாகவும் சொல்லி, அவரைத் தர்ம சங்கடத்திலிருந்து முழுமையாக விடுவிக்கக் கூடிய, பிரதிநிதியாக இந்நூல் இருக்கும்.

குடும்பத்தை நோக்கி தாக்குதல் வரும் போது, அதை உக்கிரமாகத் தடுத்திட இந்நூல் பயன்படும். வழி தெரியாமல் தடுமாறும் சூழலில் தெளிவாக வழி காட்டும் வரை படமாக, ஒரு ஆயுதம் தேவைப்படுகிற போது தயங்காமல்

